உ

முருகக்கடவுட்டுணை.



# திருநெல்வேலி

# ஸ்ரீ ஆறுமுகக்கடவுள்

# பிள்ளைத்தமிழ்.

---

## நூற்காப்பு.

### விநாயகர் வணக்கம்.

நேரிசை வெண்டா.

நீடுபுகழ் வாய்ந்ததிரு நெல்வேலிக் கோயிலிற்சீ
ரோடுதிகழா றுமுக னெனையுற்று—நாடுமொரு
பிள்ளைத் தமிழியப்பப் பேரா தரவுசெய்வாய்
வெள்ளை விநாயகத்தே வே.

### சரஸ்வதி துதி.

வண்முனைவேல் வைத்துநெல்லை மாநகரில் வாழ்ந்துவக்குஞ்
சண்முகவேள் பிள்ளைத் தமிழருள்வாள்—விண்முதல்வர்
தங்குலமும் போற்றுந் தமனியப்புத் தேனுவிற்
றங்குங் கலைவாணித் தாய் 2

### குரு வணக்கம்.

கந்தமலி காவார் கரைவனத்தூர்க் கந்தவேள்
சந்தமலி பிள்ளைத் தமிழ்பாடச் சந்த
விலக்கணமுஞ் சொன்ன வெழின்முருக தாசன்
பொலக்கமலப் பூங்கழல்காப்பு. 3

## 1-வது காப்புப்பருவம்.

### திருமால்.

திருமருவுபச்சிளங் கிளியிருபுயந்தழுவு
சிவபிரானெற்றிவிழியிற்
றிகழாறுபொறியுமொரு வடிவாகிவந்தறுவர்
செழுமுலைப்பாலருந்தி
மருமருவுசரவணப் பொய்கைதனில் விளையாடு
மைந்தனைக்கந்தவேளை
மயில்வாகனக்கடவு ளைத்திருநெல்வேலிவளர்
வரதனைக்காக்கவென்றே
யுருமருவுசங்காழி தண்டம்வில்வாளணியு
மொருவனைப்பூதலத்தை
யுண்டுமிழ்ந்தானையருள் வாரியைத்திருமகளை
யுரமார்பில்வைத்துளானைக்
கருமருவுவினையறுத் தாளவல்லானைவெண்
கடலிற்றுயின்மாலைக்
கண்ணனைக்கொண்டணிகா வண்ணனைச்சந்ததங்
கருதுமெமதுள்ளமிகவே.

### பரமசிவன்.

தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த தந்தனத் தாத்தன
மதியரவமாறுதும்பை சமியிறகுபானல்கொன்றை
மலரறுகுகூவிளங்கொள் செஞ்சடைக்காட்டினர்
வகுளமணமாலைவம்ப னெறிகணைகண்மேல்விழுஞ்ச
மயம்விழியினுன்முனிந்தெ ரிந்திடப்பார்த்துளார்
வனசதவிசூடிருந்த பிரமனெடுமால் வருந்தி
மருளவனல்வீசுகின்ற குன்றெனத்தோற்றுவார்
வலியுறுகலாலமாந்து சனகர்முதனால்வர்சிந்தை
மகிழுமுதுயோகமொன்றை நன்குறக்காட்டுவார்.
திரிபுரியுநாரதன்சொல் வழியணுகிமாதவஞ்செய்
துறவரிளமாதர்முன்பு சென்றுகற்போட்டுவார்

துடிபரசுகோல்புனைந்து பரைகவுரியோடமர்ந்து
சுபமொடரசாளும்வென்றி கொண்டமெய்த்தீர்த்தனூர்
சுருதிநிகமாகமங்கண் முறைமைதவறுமனின்ற
சுரிகைநெடுமாறன்முன்செ யும்பணிக்காட்கொள்வார்
சுரர்பலபல்கோடிதொண்டர் பணிபரமர்நாலிரண்டு
சுகுணநிருபாதகஞ்ச மன்பினிற்போற்றுவா
மதிபுகழ்க்குலாவுகின்ற பழையவடியாரியம்பு
மணியிசைகண்மார்பணிந்த நண்பனைச்சீர்த்திதோ
யளவின்மலைதோறுநின்று வளர்பவனையேகதந்த
னனுசனைவலானையங்க டம்பனைத்தீக்கணு
றவிருமுருகோனையொண்கை வடிவயிலுளானையன்ப
ரகநிலவுவானையென்று மின்பனைச்சீர்த்தபே
ரசமயிலிலேறிநிங்கு முகனையிருமாதர்கொங்கை
யணையுமுருகேசவென்றி யம்புசொற்கேட்டநாள்.
கதிவிழையுநாரிசெங்கை பெறவருள்செய்வானைமுந்து
கலசமுனிநாடமந்தி ரஞ்சொலித்தேற்றியாள்
கருணையனையாதியந்த நடுவிலனைநீதிமிஞ்சு
ககனநகர்வாழ்வமைந்தி லங்குபொற்பாக்குமோர்
கடவுளைவிசாகமொன்று தினம்விரதமாயிருந்து
கருதுநர்முனைவருங்கு கன்றனைத்தேக்குமா
கமுகுகழைவாழைதெங்கு பனசமலிகாவடர்ந்து
கவினுறுநெல்வேலிவந்த கந்தனைக்காக்கவே. 2

## பராசத்தி,

தனன தன தன தனன தன தன
தய்யத்தனத்தனன தய்யத்தனத்தனன
தனதானதத்ததன தனதானதத்ததன—தன்னத்தனத்தனா.

பரமசிவனது வலதுபுறமுறு
செல்வத்தனிக்குயிலை யவ்வைக்கினித்தவளை
யெழுபூதலத்தையரு ளியதாயைமிக்கினிய
பயசமலிகட னடுவிலாவனை
யில்வெற்றிபெற்றவளை * கையிற்றரித்துவிழி
வளர்மால்பினுற்றவளை யமுதேயெனப்பனுவல்

பகருமிசைஞர்பி னவர்தமகளென
நல்லற்புதப்பெருமை வையத்தினிற்றெரிய
மிளிர்காசியுற்றருரு கவுமாரியைப்பருவ
மின்னைக்கயற்கணை.

பகவதியைநறு மலர்கொள்குழலியை
மெல்லத்தையொத்தமொழி சொலவிறபஞசசிவையை
யுமையாளையெப்பொழுது மிளையாளையத்தமிரு
பவளவிதழுடை யவளைமரகத
வல்லிப்பெணைக்கருணை வெள்ளத்தினைக்கருமை
முகில்போனிறத்தினளை வடிவாளைவித்தமயி
பரையையருமறை முடிவினடமிடு
செவ்வைப்பதத்தினளை யலலறறவிரதருள்செய்
சுகவாரியைக்கடக கரநாரியைககிளியை
யன்னத்திலுறறவாபு

பிரமன்மதனை வலியபறலியை
வெலலுத்தமப்பெரிய ருவளாததிருப்பவளை
மகதேவியைக்கயிலை மலைவாழ்வைவிட்டமுகு
பெறுமிமயமலை மருவியுலகரு
முய்யச்சனித்துமணா நெய்தபகடுக்குமெழில்
விழிமேனைகைக்கமலம் விளையாடுபொற்புடைய
பிரியமகளைவெள் வணிதைசசிபொறி
நள்ளிக்களிப்பிஞெடு துளளிததுதிப்பவளை
வழுவாதகற்பினளை முதுஞானவித்தினளை
வண்ணத்தவத்தா குழ்.

பிரமபுரம்வரு மதலைமகிழ்வுற
வல்லைதனத்தமுத மெலலக்கொடுததவளை
யிருநாழிநெற்கொடிரு பதிஞறறத்தொகுதி
பெரிதுசெயுமுல கனையைமுதல்வியை
வள்ளுற்குலக்கொடியை வள்ளைக்கொடிச்செவியின்
மிளிர்தோடுவிட்டுமுழு மதிபோலுதிக்கைபுரி
பிடியையனநடை ·பழகுமாசியை

யெள்ளுக்குளுற்றிலகு நெய்யொத்துநிற்பவனை
யதியாவனூற்றெறமைநா மனதாடிருத்திமிக
யுன்னித்துதிததனோம்.

வரதகுமாரனை யிளமையனை மணி
வில்லைப் பறித்தநுதல் வள்ளிக்குறக் கொடிதெய்
வதயானையைத்தழுவு மணவாளனைப்பனிரு
வெயிபலைபொரு புயனையவல் பொரி
நெய்யப்பமுக்கனிக ளொளவற்புதுப்பழநல்
வடைமோதகத்தை நமா கணநாதனுக்கிளைய
வலனையிமையவ ருரகர் முனிவரர்
பல்விக்கினக்கவலை யெய்நித்தவிக்கதகி
யடல்வீரமிக்குடைய முதுகூரனைச்செருவி
னெண்ணிச்சிதைத்துமா

வடிவைபயிலொரு செவியகுருகென
மல்கச்சமைத்தவனை வில்வத்திருத்தளிர்பொன்
மருநீபவெட்சித தளபீலநற்றுளசி
வனையுமழகனை மநவனரசது
கொள்ளக்கொடுத்தவனை மல்லற்றமிழ்க்கிளியை
வலமாரிலைவைத்தவனை மலையாசலத்தினடு
மருவுகுறுமுனி செவியிலருமறை
விள்ளற்புடைக்குகனை வெள்ளைக்கலைக்குமரி
வரைவரகுவைப்புனரு மிறையோனடுத்தலையில்
விம்மப்புடைத்ததே,

வரசையனலெழு மடவியனுகுபு
மெள்ளக்கவிப்புலவ னுய்யச்செய்யுட்சொலென
நுவல்வேடனைக்கனக மகமேருவொக்குமலை
யறுவரமுதமுண் மழலை முருகனை
மையிட்டகட்சிறுமி யையற்றவப்பொழுத
தனையீயுமுத்தையனை யழியாதநித்தியனை
யகிலமுழுமையு நிறையுமமலனை
நைவுற்றிளைத்துருகி மெய்வற்றிடப்பதும
மலர்தூவுபத்தருள மகலாத சிற்பரனை
யெண்ணிக்கையற்றசீ.

ரவிர்பன் மலைதொறு    முறையுமிறைவனை
நொய்மைப்பொருட்கருது    கள்ளத்தனத்தினரை
விழையாதவித்தகனை    வெகுமோகனத்திறனை
யருணனெனவொளி    குலவுபரிபுர
மல்கித்தொனிக்குமிரு    மெய்மைப்பதப்பரம
குருநாதனைக்குதிரை    தகரேறுமுக்கிரனை
யரவமொடுபுலி    முனியும்வழிபடு
தில்லைத்தலத்தைநிகர்    நெல்லைத்தலத்திலொரு
வடிவேல்பிடித்துவள    ராறுமாமுக்கடவு
டன்னைப்புரக்கவே. 3

## சந்திவிநாயகர்.

தந்தன தானன தாததனத் தாத்தன
சந்திரசேகரர் சீர்க்கையிற் றாக்கியார்
தம்புயமாதிர மேற்றிவைத் தாற்றல்கூர்
சம்பிரதாயனை யாக்கவெற் பேட்டிலே
தந்திரமாமுனி வார்த்தையைத் தீட்டி நீ
டந்திமுகாசுரனுக்கையைத் தாக்குமோர்
தந்தனைமாசறு பூப்பறித் தேத்துவார்
தந்துயராகுலமாற்றி மிக்காட்கொண்மா
சந்திவிநாயகமூர்த்தியைப்போற்றுவா
மிந்திரனுதியரேக்கமுற்றோட்டுமா
றிங்கவுணேசனை மாய்த்தமற்கூற்றைவா
னெங்கணுநீடிய கீர்த்திநட்டேற்றுபே
ரின்பனையாடக மூர்த்தனைச் சீர்த்தவான்
மந்திகள்பாய்தரு தோப்பினிற் பூக்கண்மேல்
வண்டிசைபாடுதேக்கினிப்பாக்குந்தேன்
மண்டிடும்வேய்வன நாப்பணுற்றேத்தவாழ்
வண்கதிர்வேல்புனை தீர்த்தனைக்காக்கவே. 4

## திருமகள்.

தந்ததனத்தன தாந்ததனத்தன தனனத்தனத்தன
வம்புமுலைச்சசி மாந்தர்தொழப்படு திருவுத்தமச்செயாண்

மங்களமிக்கவள் வேந்தரருட்கடல் வனசத் திலுற்றதாய்
சம்புரம்வைத்தபொனோங்குமடக்கொடியழகிற்பெருத்தசீர்
தங்குமிலக்குமி பூங்கமலக்கழலிணையைப்பழிச்சுவா
நம்புமதிப்புறு காந்திமதிக்கொருமகனைக்குறப்பெண்மே
னன்குவிருப்பனைவேங்கையுருக்கொளுமவனைச்செருச்செயோர்
கொம்புகரத்தினிலேந்தினவற்கிளை யவனைக்குளிர்ச்சிசேர்
கொண்டலெழிற்பொழின்மூங்கில்வனத்துறைகுகனைபுரக்கவே

## பிரமன்.

வாசனைமதுபபுது விதழ்ப்பெரும்பங்கய
மலர்த்தவிசில்வீற்றிருந்து
மண்டலமுழுக்கப் படைக்குமெட்டுக்கரனை
மறையோனைநான்குமுகனைத்
தேசவி ரெழிற்செந் நிறப்பகவனைத்தமிழ்ச்
செல்விவளர் நாவுளானைத்
திருமால்சுபுத்திரனை யன்னத்தில்வாழ்பிரம
தேவனைப்போற்றிநிற்பா
மாசரைக்கொற்றமுட் பற்களப்பையரவ
மஞ்சுறக்கூவியண்ட
மளாவக்கலாபச் செழுஞ்சிறைவிரித்துநட
மாடுமயில் வாகனத்தி
னேசமுற்றிருமாத ரொடுகூடிமகிழ்வுற்று
நேமியெல்லாம் புரந்து
நேல்வேலிநகரத் திருக்கோயிலிற்குலவு
நெடுவேலனைக்காக்கவே 6

## ஸரஸ்வதி.

தனதனதனதன தந்தத் தந்தத் தனதனத் தாத்த தத்தன
சுருதிகளறிபவ ளெண்கைக்கஞ்சத்தனையளித்தூக்கமிக்குளாள்
சுகுணமுடையகொடிவெண்பர்றஞ்சப் பெடையயிர்கூர்த்தமைக்களுள்
மருமலரணியவளின்பச்செஞ்சொற்புலவருக்கார்த்தருட்செய்தாய்
மடவரலடிகளை நம்பிக்கும் பிட்டகமதிற் போற்றி நத்துவா
மிருளிறுமியருநெருங்கிக் கொஞ்சிப்பழகுதற் கேற்றநட்புமீ.

ணிரத்தபீசா சுரன் முத
லாமள விலா வசுரரைச் சங்கரித்தவடி
வம்மை திருநெல்வேலியி
னாலயத் திலகு பொற் றாமரைச் சுனையருகி
லமரும் பராசத்தியே. (9)

## முப்பத்துமூவர்.

தனதனத்தன தத்தத்த தானன தனதன தனத்தனா

தெருண் மறைப் பொருளைக்கற்ற தேவர்பொன் மணிமுடி தரித்துளார்
திருவருட்கட லெத்திக்கு நாடுபுதொழு தெழு புகழ்ச்சியா
ரிருமருத்துவ ரெட்டுற்ற நாலினர் பதினொருவர் செய்பு நா
லிருவசுக்களென் முப்பத்து மூவர்த மலரடி வழுத்துவா
மருமு கிற்புரை யச்சுற்றநாரணர் மருகரை யுயர்ச்சிதோ
யமரருக் கிடர் வைத்திட்ட தானவர் மறலியை விழுப்பமார்
மருமலர்ப்பொழிலிற் பச்சை மாமயி னடமிடு சிறப்பினால்
வளமிகப்பெரு கித்துற்று வேய்வன முருகரை யளிக்கவே. (10)

காப்புப்பருவமுற்றிற்று.

# செங்கீரைப்பருவம்,

கலைமகளு மாமகளு மயிராணியும்பரவு
காந்திமதியம்மை வளையற்!
கையாலெடுத் துச்சி மோந்து நீராட்டியொரு
கமலன் படைத்த புவியை
விலைமதிப்பில்லாத மணிமோதிரம் புனையும்
விரலாலசைத் துரைத்து
வெண்ணீறுடன் றிலக மிட்டுச் சியிற்கனக
மிளிர்மணிச் சுட்டிசாத்தி
யுலைவா யிரும்பெனத் திகழுரை வடங்கட்டி
யுபயகழலிற் பரிபுர

மொழி செயப் பூட்டிமுலை விம்மச்சுரந்தபா
ஊட்டமகிழ் முருகவேளே
சிலைநுதற் குறவள்ளி தழுவுமணி மார்பனே
செங்கீரையாடியருளே
சீர்குலவு நெல்லை நகர் வாழவரு கந்தனே
செங்கீரையாடியருளே. (1)

வானவரி யக்கர்கிம் புருடர் கின்னரர் வீணை
வல்லநாரதர் மற்றையோர்
வாழ்த்து கங்காளர் திரு நெற்றிக்கனற் கண்ணில்
வருமறு பொறிப்பிழம்பின்
கானற் பொறுக்காம லமரரஞ்சப் பரமர்
கண்டுவங் கூழ்க்களித்துக்
கவினீடு சரவணப் பொய்கையுய்த் தாறுருக்
காட்டியறு மீன் முலைப்பாற்
றனமுதருந்திவிளை யாடலைச் சிவைகண்டு
சந்தோஷ முற்றவற்றைத்
தன்னிருகையாலெடுத் தொன்றாகிடச் செய்து
தன்னிய மளிக்கவுண்டு
தேனலரு நீபமணி பன்னிரு புயத்தனே
செங்கீரையாடியருளே
சீர்குலவு நெல்லைநகர் வாழவரு கந்தனே
செங்கீரையாடியருளே. (2)

பச்சைப் பெரும்புரவி கட்டுமிரதத்தில்வரு
பகவர்பல கோடியொன்று
பட்டுதித் திடலெனக் குலவிய சுயஞ்சோதி
பளபளப் புற்று வீச
விச்சைப் படும்பாகு கற்கண்டு புத்தமுத
மிக்கினு மினிக்க நீகூ
றிடுமழலை வார்த்தை கேட் டென்னப்ப வென்னப்ப
வின்னஞ் சொலென்று கொஞ்சிக்

கச்சைக் கிழிக்குமுலை மாதா பிதாவோடு
கனமேவு செவிலிமாருங்
காதலுற்றுப் பக்க நின்று மகிழக் கையுங்
காலுமூன்றிப் பொன்முடியுஞ்
செச்சைமலர் நீலமு மசைத்தாடு மையனே
செங்கீரையாடியருளே
சீர்குலவு நெல்லை நகர் வாழவரு கந்தனே
செங்கீரை யாடியருளே. (3)

அணிகொண்ட சுனையருகி னிற்குமர சிலைவீழி
லைவணியிற் பறவையா நீ
ரதுவீழின் மீனாகி விடு மொரிலை யங்கிங்கு
மரையாய் விழுந்திரண்டு
மணிகொண்ட வடிவாகி யுறுபட்சி மண்ணுக்கு
மச்ச மப்புக்கு மீர்க்கு
மாவதி சயத்திலுள மொன்றற் றெரிந்தங்கு
வளர்பூத மொன்றெடுத்துக்
கணிகொண்ட பெருவரைக் குகையூடு விட்டுக்
களித்து நீராடி வருமுன்
கண்டுறழ் தமிழ்ப்பாடி வந்திக்கு நக்கீரர்
காவலை யகற்றி யாண்டு
திணிகொண்டவப் பேயை வென்றிட்ட வேலவா
செங்கீரையாடியருளே
சீர்குலவு நெல்லை நகர் வாழவரு கந்தனே
செங்கீரையாடியருளே. (4)

முடியேறு மிந்திரனு மிந்திரையும் வானவரு
முனிவரரும் வந்து சூழ்ந்தார்
முண்டகப் பகவனுங் கலைமகளு நின்புகழ்
மொழிந்து வந்தித்து நின்றார்
கடியேறு பைந்துளசி மாலையணி மார்பனுங்
கருதிக் குலாவுகின்றான்

கனகமகமேருவைச் சிலையாக வைத்தமுக்
        கண்ணருங் காதலுற்றுப்
பொடியேறு திருமேனி பூரித்து முன் செயும்
        புண்ணிய மெனக் களித்தார்
புவனம் படைத்தவுமை யுந்தன் முலைப்பால்
        புகட்டியுண் மகிழ்ச்சி பூத்தா
ளடியேறு பரிபுர மொலிக்கின்ற செய்யனே
        யாடியருள் செங்கீரையே
யழகுதரு நெல்லை நக ரவிரு முத்தையனே
        யாடியருள் செங்கீரையே. (5)

சண்டனமன் வேதனும் வழக்குச்செயாதமா
        தவமுதிர்ந் திறைவர்மகவாய்த்
தாழ்விலைப்படு பெருமை யுற்ற பெரியோன் விந்து
        தனையெடுத் துண்ட கணிகை
கொண்டகரு மதலையாகிப் பிறந்திளமையிற்
        கோதையர் பெற் கடற் குட்
குளித்தாடலைச்சகிக் காமலக்காள் சொன்ன
        கொடுமொழிக் கஞ்சியருணைத்
தொண்டர்வழி படுசிகரி யேறிக் குதித்ததனி
        துன்னியுபதேசம் வைத்துச்
சோணைமதுரத்தமிழ் பொழிந்திடச்செய்துமுன்
        குடிக்கையிற் கிள்ளையா
யண்டமும் புகழப் புனைந்த முருகேசனே
        யாடியருள் செங்கீரையே
யழகுதரு நெல்லை நக ரவிரு முத்தையனே
        யாடியருள் செங்கீரையே. (6)

வேறு.

புரையுமை யவளிரு பங்கய மொன்றிய
        பாவையர் நின்றாடப்
புதியதமிழ்க்கவி மாலை தொடுத்தணி
        பாவலர் சூழ்ந்தாட

வரைபொரு தோள்வய வீரர் சமர்த்துயர்
மாய்கை நினைத்தாட
மைம்முகில் வண்ணர் முதற்பலவானவர்
வன்பயமற்றாட
நரைவிடை வாகனராகிய தந்தையு
நாடிமகிழ்ந்தாட
நடமிடு தோகை மயிற் பரிகுக்குட
நாகமிசைந்தாட
வரையட மொடுபத கிண்கிணியாடிட
வாடுக செங்கீரை
யமைவன மேவிய சண்முக நாயக
னாடுக செங்கீரை (7)

சித்திரவெண்ணிற மதியொளி வீசறு
திருமுக மலராடத்
திறலவுணச னடுங்க வதைத்திடு
செங்கைகவை வேலாடப்
பத்தினிமார்முலை யுற்றணையப்படு
பன்னிரு தோளாடப்
பண்டி குலுங்கிட வரையிலுடுத்திய
பட்டரை வடமாட
முத்தி விழைந்து தவம்புரி போதக
முத்தர்க ளெஞ்சகமா
முளரி விளங்கிய திருவடி நூபுர
மோலியிசைந்தாட
வத்திரியிலொரு பெண் வரச்செயு மதிசய
னாடுக செங்கீரை
யமைவன மேவிய சண்முக நாயக
னாடுக செங்கீரை. (8)

தனதன தத்தன தந்தன தானன தந்தா தந்தான.

மனைவலைவைப்பெண்ம ணந்தகணேசர்பின் வந்தாய் செம்பேயு

மகசபை யுற்றுந டம்பயிலீசர்த மைந்தா செந்தாம
ரீனமலர் பிச்சிக டம்புதுராவணி நண்பாகந்தாவி
னைகருர மற்றவ ரும்பணி காவல நம்பாசம் போகல்
வினையு மொழித்தருளுங் கருணாகர வெஞ்சூரன் சாவ
விரைவி லறுத்தவ சுந்தர தேசிக மின் சீர் குன்றுத
தினைவள மிக்க குறிஞ்சி மகேசுர செங்கோ செங்கீரை
திகிரி வனத்துறை செங்கதிர் வேலவ செங்கோ செங்கீரை (9)

திருவருளுற்றவர் கிந்தையில் வாழ்பவ செங்கோ செங்கீரை
சிவனமு லக்கம் விளங்கிய பாலக செங்கோ செங்கீரை
தெருளு மகத்தியர் முன்பணி தேசிக செங்கோ செங்கீரை
செகதல முற்றுநி றைந்த பராபர செங்கோ செங்கீரை
செருவில ரக்கரை வென்ற பொராதவசெங்கோ செங்கீரை
தினமு நினைப்பவர் துன்பறு சேவல செங்கோ செங்கீரை
திருடு நருக்குநி னைந்தமை யீபவ செங்கோ செங்கீரை
திகிரி வனத்துறை செங்கதிர் வேலவ செங்கோ செங்கீரை (10)

செங்கீரைப் பருவ முற்றிற்று.

## தாற்பருவம்.

வெண்ணீறணிந்த பெருங்கனக வெற்பொன்றுதவக் கினிமலைபோல்
விளங்கு செழுஞ் சோதிப்பிழம்பா மேனிமுருகப் பெருமானே
கண்ணீர் வடித்துச் சினந்தழுது கன்னன் மொழிக்கார்த்திகை மடவா
கையாலெடுத்துச் சிமோந்து கலசமுலைக் கச்சவிழ்த்த ணைத்துத்
தெண்ணீர முதப்பாலளித்துத் தியங்கக்குடித்தப் பசிதீர்ந்து
சிந்தை மகிழ்ந்து சிலம்பொலிக்கச் செந்தா மரைப்பொற் சரவணப்பேர்த்
தண்ணீர்த் தடத்தில் விளையாடுந் தனையா தாலோ தாலேலோ
சங்கத் திருநெல்வேலி வளர் சாமீ தாலோ தாலேலோ. (1)

செந்தாமரையில் வீற்றிருக்குந் திசைமா முகத்தன் மால்பரவுந்
திகழ்வெண் கயிலைக்கிரி நீங்கிச் சீருய் யான மண்டபத்தி
லந்தாரக முன்னெழுகோடி யணிமந்திரம் பின்னெழுதி
யானைபிடியுந் தழுவுதல்போன்ற விரோவியம் பார்த்தவ்வாறே
சந்தா கரக்கச்சிளமை முலைச் சாம்பவியுஞ் சம்புவுங் கூடித்

தருமுக் கணனாகத்தோன்றித் தந்தி முகத்துத் தானவனைத்
தந்தா யுதத்தால் வதைத்த பிரான் றம்பீ தாலோ தாலேலோ
சங்கத்திருநெல்வேலி வளர் சாமீ தாலோ தாலேலோ. (2)

மந்தியிணங்கி விளையாடும் வண்மைப் பொழிற் பொய்யா மொழியூர்
வந்து பிறந்து பாலியத்தின் மறையாகமநூன் முழுதுணர்ந்து
சந்திரனைப் பொற்கடுக்கை மலர்த்தாரை யணிவார் சததளப்பூந்
தாளைவணங்குந் தமிழ்ப் புலவன் றனித்துப் பாலைத் தழல் வனத்திற்
புந்தி கலங்கச் சிலைவேலும் புனைந்து கரிய முகிற்போலும்
புளினனுருவாச் சினந்த தட்டிப் பொலன் முட்டையின்மேற பாடுகெனச்
சந்தித்துரைத்துக் கவிகேட்ட தலைவா தாலோ தாலேலோ
சங்கத்திரு நெல்வேலி வளர் சாமீ தாலோ தாலேலோ (3)

சீவைகியவை குந்தத்திற் றிருமாதருந்த தியைப்போலுஞ்
சிறந்த சிவகாமசுந்தரிதன் செம்மலுடன்செய் தவபலத்தாற்
பாவை யார்மைச் சடல் கடந்து படியிற் பிறந்தைந் தாண்டுமைப்
பாலனு வுற்றமை நாடிப் பணிதற்கிரங்கி யருச்சகனாய்ப்
பூவைக் கழுத்திட்டோதுகெனப் புகன்றவுடன்பூவெனத்துவக்கிப்
புனித மதுரப் புதுப்பாடற் பொழியப்புனைந்து பழையவினைத்
தாவையொழி ‘தாண்டருள் புரியுந் தாதா தாலோ தாலேலோ
சங்கத்திரு நெல்வேலி வளர் சாமீ தாலோ தாலேலோ. (4)

சுனையின் விரிதாமரைப்பூ மேற் சுத்தோதக நற்றிரை யொதுக்கச்
சூல்வால் வளைவாழ் வினைக்கெண்டை துள்ளிப்பாயப் பொழிலுலவி
மனையிற் கடைவீதி யிற்புகுந்து மடமை மாதர்கந் தரத்தின்
வனப்புப் பார்த்து மனநாணி மதிய மரவங் கொக்கிறகும்
புனைசெஞ் சடையார் செவிப்பூணும் புகழ் வல்லமையை விரும்பியறற்
பொலன் சாலருகின் மணியுகுத்துப் புளகம் பொருந்தித் துயில்வளத்தாற்
றனைநேர் நெல்லைத் தலத்தரசே தாலோ தாலோ தாலேலோ
சமரக் கதிர் வேலாயுதனே தாலோ தாலோ தாலேலோ (5)

மங்குல் சிறுகால் வந்துலவும் வளமைச் சோலை வானரங்கள்
வாசத்துணர்ப்பூந் தேனையின்று மதர்த்துக்குலாவு தலைப்பார்த்துச்
சங்குமிடற்று மடமின்னார் தானைவளைந்த திருமாரன்
றருந்த கரும்புச் சிலைவளைத்துச் சரப்பூமாரி பெயுநிமித்தம்
பொங்கு மயலுற் றுறோடு பெண் பொருந்திப் பணைச் சுனையோடு

மகாமகோபாத்தியாய
டாக்டர். உ. வே. சாமிநாதையர்

புதுமைத் தேமா நறுங் கனியைப்பொற் பந்தடித்து விளையாடித்
துங்கும் புகழ் வேய் வனக்கந்தா தாலோ தாலோ தாலேலோ
அமரக்கதிர் வேலாயுதனே தாலோ தாலோ தாலேலோ (6)

## வேறு.

சிரவணநாளும் வழுத்து மகத்துவ தேவ சிகாமணியே
இலைநுதல் வள்ளிதரும் தினை மாவைத் தின்று களிப்பவனே
யரவணையிற்சுரி சங்கம்விழாமணிந்தவிர் பாற்கடலி
லமரரு மெச்சிட ஞானத்துயில் செயு மச்சுதன் மருகோனே
சரவணவாத பெருந்த வருள்நுறை கந்தா முருகேசா
கார்த்திகை முறைநாளிற் பணிவார் துயர் களையுமருட்குகனே
சரவண மடுவிற்ற வழும்வி சாகா தாலோ தாலேலோ
தருமமிகுந்த நெல்வேலியில் வாழ்வாய் தாலோ தாலேலோ (7)

சந்திர சேகர ரின்பமுறும்படி சங்கச் செவியூடு
தாரக மெய்ப் பொருளுபதேசித் திடுசற்குரு தேசிகனே
மந்திர நீர்மலர் கொண்டு துதிப்பவர் மாசு தவிர்ப்போனே
மாமரமாகிய சூரனை வெட்டிய வடிவேலணிவோனே
யிந்திரனருளிய குஞ்சரி தோள் புணரிளமைக் குமரேசா
வெம்மலையும் புகழ்மயமலைக்குயிலீனிய புத்திரனே
தந்திர சமயமு மேவிய தேவா தாலோ தாலேலோ
தருமமிகுந்த நெல்வேலியில் வாழ்வாய் தாலோ தாலேலோ (8)

தத்தன தனதன தய்யத் தனன தானா தானானா

மெய்த் தமிழ் முனிமகிழ் வெய்திப்பரவு விவேகா தாலேலோ
வெற்பக நனிதிகில் கொள்ளத்துளைசெயும் வேலா தாலேலோ
சித்தசனெனுநறு செவ்வைக் கவின்மலி தேகா தாலேலோ
சித்திரவிழிமற வள்ளிக் கொடிபுணர் சீலா தாலேலோ
சுத்தமெய்யறி வினருள் ளத்தினிலுறை சோதீ தாலேலோ
சுப்பிரமணிமலர் நெய்தற் றொடை புனை தோளா தாலேலோ
சித்த மடியர் பகர் செய்யுட்டொகை யணி நேசா தாலேலோ
நெற்புல வளமலி நெல்லைப்பதி வளர் நீதா தாலேலோ (9)

தனதன தானன தன்னன தானன தானா தானா.

சமணருமாறுதை பண்ணினர் பாலக தாலோ தாலேலோ
சருவவியாபக நண்ணுமகேசுர தாலோ தாலேலோ
சமரவுணேசனை வென்முனை வேலவ தாலோ தாலேலோ
சகளவு பாசக ரெண்ணு தலீபவ தாலோ தாலேலோ
தமனக நீடமு மின்னிய சேவல தாலோ தாலேலோ
தமிழிசை கூர் கிளி துன்னுபுயாசல தாலோ தாலேலோ
சமரசர் பேணிய சண்முக நாயக தாலோ தாலேலோ
தருபுகழ்வேய்வன மன்னுமனோகர தாலோ தாலேலோ (10)

முற்றிற்று.

## சப்பாணிப்பருவம்.

எப்பாத கங்களு மியற்றுத விண்ணாட
ரெண்ணின் மலர்மாரி கொட்ட
வீட்டற்ற கந்தருவர் வீணை நாரதர் முத
லிசைத்துதி மிகுந்துகொட்ட
மப்பாரு மைக்கூந்த லசுரக்குலப் பெண்கள்
மார்பிலிருபாணிகொட்ட
வதுப்புத் திருப்புக ழுரைத்தஞ் சலிப்போர்கள்
வருமுவப் பமுது கொட்டச்
செப்பா ரணப்பனவர் வீடு தொறும் வேள்வியிற்
சீராவினறு நெய் கொட்டச்
சீலத்தவப் பெரியர் பூசைமட மெங்கணுஞ்
சேகண்டி நன்கு கொட்டத்
தப்பாது நின்பனிரு கட்கருணை கொட்ட வொரு
சப்பாணி கொட்டியருளே
தண்டலை வளங்குலவு நெல்லைக் குமேசனே
சப்பாணிகொட்டியருளே. (1)

பங்கய மலர்க்கடவு ளும்பரவு கயிலையிற்
பரமர்தம் பங்கினீங்கிப்
பனிவரைப் புரவலனு மேனையுந் தொன்மையிற்
பண்ணுமாதவ முதிர்ந்து
மங்கலற் றொளிர் பொலன் பச்சிளங்கிளி யனைய
மதலையென வந்துதித்து
வானோரு முனிவரரு மற்றுளாரும் வந்திக்கும்
வண்ண மங்கல முடித்துப்
பொங்கலை கடற்பருகு பொதியா சலத்து முனி
போல்வாரை யடிமை யாக்கிப்
புன்கணெய் தாதினிது முப்பத்திரண்டறம்
பூரித் தியற்றியரசு
சங்கரருடன் செய்த காந்திமதி பாலகா
சப்பாணிகொட்டியருளே
தண்டலை வளங்குலவு நெல்லைநகர் வாசனே
சப்பாணிகொட்டியருளே. (2)

அருமை தடி கரு நிறம் பாசிப்பனுடல் வளைவு
மடையு மாயன் குடப்பா
லயன் மாலு மறியாத வன்குலவு வேய் முளையி
லடியிடறி யங்கு கொட்டி
யுருளுவது மக்கும்ப முடையாமையுந் தெரிந்
துவகை கொடு மணவை யாள்வோ
னொடு சொல்லி வற்புறுத்திய பின்னுமொருநாளி
லொக்கக் கவிழ்ந்தவுடனே
பருவரலடைந்து பர சால் வெட்டிடக்குருதி
பவ்வமடை போலெழும்பற்
பார்த்த ராமக்கோனு முழுதுகண்டுளராம
பாண்டியனும் வேண்டும் வண்ணந்
தருசாலி வாடிசர் பெற்றகுமரேசனே
சப்பாணி கொட்டியருளே

தண்டலை வளங்குலவு நெல்லை நகர் வாசனே
சப்பாணி கொட்டியருளே (3)

செய்வளங் குலவுசீ காழிநகரிற் பனவர்
திருமரபி லவதரித்துத்
தேனாறும் பாகுகற் கண்டுபுரை செந்தமிழ்த்
தேவாரமிக்கியம்பி
மைவனப் பயிர்விழிப் பார்ப்பதி தனப்பான்
மடுத்து மெய்ஞ்ஞான முற்றி
மயிலைத் தலத்தத்தி யிற் பெண்ணையு யிரோடு
மறுபடியும் வரவழைத்து
மெய்யுறக் குக்கிணங் காது நிமிர்ச மணர்களை
வெங்கொடுங் கழுவிலேற்றி
விடமகற்றிப் புனலி லேடெதிர்த்துச் செல்ல
விட்டனலில் வேவாது செய்
சைவகுருவாகியும் விளங்கு முருகையனே
சப்பாணி கொட்டியருளே
தண்டலை வளங்குலவு நெல்லை நகர் வாசனே
சப்பாணிகொட்டியருளே. (4)

கச்சியிற் கந்தப்புராணப் புனைந்துரைக்
காப்பின் முற்றிகழ் மொழிச்சீர்
கவினமுதியவனாகி மன்றினுற் றொருதமிழ்க்
காவிபங்காட்டு முதல்வா
பச்சிளமயிற் பெருந் தோகை விரிநீழலிற்
பன்னியர் தமக்கு நடுவிற்
பவளமலை போல் விளங்குஞ் சுயஞ்சோதியே
பகையசுரர் குலகாலனே
பிச்சியும் பாணலும்பச்சையுஞ் செச்சையும்
பின்னப் புனைந்த முருகா
பேதமொரு சிறிதுமில் லாமற் பராவுவார்
பிணிமுழு தொழிக்கு மரசே

சச்சிதானந்தவடி வான குருநாதனே
சப்பாணி கொட்டியருளே
தண்டலை வளங்குலவு நெல்லை நகர் வாசனே
சப்பாணி கொட்டியருளே. (5)

## வேறு.

கலிவாதனையால் வருந்தாமற் கயற்கண் மடவார் கனற் காமக்
கடலிற்றிளைத்து முழுகாமற் கருகித்தினமுந் தவம்புரிவார்
மெலியா துவக்கும் பொருட்டழகு விளங்கும் பசிய நெடுந் தோகை
விசும்பளாவ விரித்தெயிற்று விடப்பைந் நாக மெடுத்துதறி
மலிசீர் நடனம்புரிகின்ற மயில் வாகனத்திலிரு மாதர்
மையகிலவப் புவனிவரும் வரத முருகப் பெருமானே
குலிசாயுதன் போற்றிய குகனே கொட்டியருளாய் சப்பாணி
குலவும் வேணுவனக் குமரா கொட்டியருளாய் சப்பாணி (6)

ஆழிநடுவிற் படப்பாந்த ளணையிற் படுத்து வளை சங்க
மணுவுநழுவா தறிந்து துயிலமர்ந்த நெடுமால் விழியில்வரு
பாழிப் புருவத்துணை மடவார் பருமைக்கு வட்டுப் பயோத ரஞ்சேர்
பலப்பன்னிரண்டு தோளானே பஞ்சமுகப் பவளவரையிற்
கீழினரும் போற்றிடப் படர்ந்து கிளர்ந்தோர் கோட்டாம் பலைப்பூத்துக்
கேழிலுல கெல்லாமீன்ற இருபா கரப்பைங் கொடியீந்த
கோழிக்கொடி யொன்றுடையானே கொட்டியருளாய் சப்பாணி
குலவும்வேணு வனக்குமரா கொட்டியருளாய் சப்பாணி. (7)

அண்டமளாவச் சிறகு விரித்தாடு மயில் வாகனத்தோனே
யருட்சீர் நாடித் தவம்புரியு மடியாரகத்தா மரைதொறும் போய்க்
கண்டனைய செந்தமிழ்க் கொண்டு கருது வனவெல்லாம் வழங்கிக்
களபமுலைக் கன்னியர்நடு விற்க வினுங்குமர குருபரனே
தண்டமயில் வேன் முதற்படை கடாங்குந்த டக்கைப் பெருமானே
சரசிற் காளிங் கன் முதுகிற் சாவநடனஞ் செயுந் துணைத்தாட்
கொண்டல் புகழு மருகோனே கொட்டியருளாய் சப்பாணி
குலவும் வேணுவனக்குமரா கொட்டியருளாய் சப்பாணி (8)

தனதன தானன தானன தத்தன தத்தன தத்தான

பூலமலிசூரனை மோதிய நெட்டயில் பற்றுகரத்தீர

பனிவரை மேனை மினீயுமுலைக்கன பக்கொடி நற்பால
வலது புயாசல மூடு தமிழ்க்கிளி மைத்துன விக்தார
மகபதிவானர சானவளிக்கும கத்துவ மெய்த்தாத
வலகறு சோதி மயேசுர முத்தைய வற்புத வுற்சாக
வறநெறி யேகிய மாதவரச் சமசுற்றும ருட்டேவ
குலமயில் வாகன நீழலிலுற்றவ கொட்டுக சப்பாணி
குலவுநெல் வேலியில் வாழ்வுறுதற்பர கொட்டுக சப்பாணி. (9)

தனதன தானனை தனதன தந்தன தத்தன தத்தான

கொடியொரு சேவல் கிளியுமணியும்புய கொட்டுக சப்பாணி
குறுமுனி பேணிய பெருமை நிறைந்தவ கொட்டுக சப்பாணி
குடிலையை யீசுரர் செவியின் மொழிந்தவ கொட்டுக சப்பாணி
குறமகள் சீரடி மலர்பரவுங்குக கொட்டுக சப்பாணி
குடிவெறியாளரை முனியு நிரஞ்சன கொட்டுக சப்பாணி
குவளை குராவலர் துளசி புனைந்தவ கொட்டுக சப்பாணி
கொடிய நிசாசரர் குலமடு மந்தக கொட்டுக சப்பாணி
குளிர்பொழில் வேய்வன மருவிய சுந்தர கொட்டுக சப்பாணி. (10)

முற்றிற்று.

# முத்தப்பருவம்.

மகர மீனந்திப் பிசங்கு வராகத்தந்தமி பமருப்பு
மதன்னைச் சிலை நாகங்கமுகு வாழைக்கரும்பு சாலிகளை
தகரக்குழனங்கையர் கழுத்துச்சலசம் பசுப்பன் முகிலுடும்பு
சமியிற்றிகழ் முத்துகட்கெல்லாஞ் சகத்தோர் மதிக்கும் விலைமிகவுண்
டகரம் போலெவ்வுலகுக்கு மாசாயி மையோர் போற்று முன்ற
னவிர் செம்பவளவாய் முத்தமதுக் கோரணுவும் விலையில்லை
முகமாறுற்ற முருகோனே முத்தந்தருக முத்தமே
மூங்கில் வனத்தில் வளர் முதல்வா முத்தந்தருக முத்தமே. (1)

மைக்கட் குழகத்திரு மடவார்வாஞ்சை பிடித்துமனை தொறும்போய்
வாசத்தகரக் கருங்குழலின் மணச்சாந்தணிந்த முலைக்குவட்டிற்
பைக்கட் செவிநேர்கடி தடத்திற்பவள வாயிற்றின மயங்கிப்
பணைத்தோட் பொருந்தித் திரிந்துழலும் பாவி யேனைத் தடுத்தாண்டு
மிக்கட்டுறுதன் மிகப்பார்த்து மிரங்காதிருக்கை முறைதானோ

விப்பூதலமு முயும்வண்ண மெண்ணான்கற முன்னாள் வளர்த்த
முக்கட்காந்திமதி புதல்வா முத்தந் தருக முத்தமே
மூங்கில் வனத்தில் வளர்முதல்வா முத்தந்தருக முத்தமே. (2)

அருகக்கடவுட் புறச்சமய மனைய சமயமனைத் தினிலு
மருளை நாடித்தவம் விழைக்கு மடியாரிடத்திற் போயுண்மை
பெருகக் கடவதெனக்கூறிப் பிறப்பு மிறப்பு மில்லாமற்
பேணுமளவில் வேட்டபடி பெய்யுங்கருணைப் பெருவாழ்வே
மிருகக் கடவாரணம் புரவிமேட மயிலில் வருவோனே
வேடமடந்தை முலைக்கோட்டின் மேவும் பனிருபுயமுடைய
முருகக் கடவுளேயுனது முத்தந்தருக முத்தமே
மூங்கில் வனத்தில் வளர் முதல்வா முந்தந்தருக முத்தமே. (3)

கத்துமுதநிச்சங்கினத்திற் கமுகிற் பறையிற் படவரவிற்
கைம்மா மருப்பிற் செங்நெல்லிற் கற்புமடவார் கந்தரத்தி
லத்துவன சத்தினிற் காமனம் பிற்றிகழ் மாமணிகளுக்கு
மலைநேர் தாளங்களுக்குமொவ்வோரழுக்குண்டொருக்காலழிவதெண்ணி
நத்துமனத்தாளுடு கிலேனு கபதிவாழ்வையும் வெறுத்துன்
னளினத்திருத்தாட்டுணையிறைஞ்சு நல்லோர் பதத்தை மிகத்துதிப்பேன்
முத்துவடந் தாங்கிய மார்பா முத்தந்தருக முத்தமே
மூங்கில் வனத்தில் வளர்முதல்வா முத்தந்தருக முத்தமே. (4)

நறைவாரிசப் பூந்த விசிலுற்ற நாதனினிமேற் படைக்காம
னடுங்கப் புரியும் பாசவலை நமன்பாற் புகுந்துவருந்தாமற்
பிறைசூடிய செஞ்சடையார் மேற் பிறழ்வுற்றலர்க்கார் முகம்விடுத்த
பெரியமதவேள்கணை தைத்துப் பெண்ணாசை யிற்பட்டுழலாமற்
றறைமீதுன்ற வெழுத்தாறுஞ் சாற்றிப்பணிந்து சகுணமுற்றிச்
சரதமா நிர்க்குண நாடுந்தவத்தோ ருளக்கோயிலிற் றயங்கு
முறைமாரூத கருணையனே முத்தந்தருக முத்தமே
மூங்கில் வனத்தில் வளர்முதல்வா முத்தந்தருக முத்தமே. (5

வேறு.

பொன்னிதழிவில்வம் பகீரதி யெருக்கிறகு
புற்றரவு பிச்சியறுகு
புனலிமதி தமனகந் தாதகி கரந்தைசமி
புனை சடைப் பரமருக்குங்

கொன்னிலவு வெண்ணிறப் பதுமாதனத்தினிற்
குடிகொண்டிலங்குபுனிதக்
குமரியிருவார் முலைக் களப மன்றற் சேறு
கூடுமணி மார்பருக்குந்
தன்னிகரிலாத பொதியாசலத் துறைகும்ப
சம்பவக் குறுமுனிக்குஞ்
சந்தத்த மிழக்கிளியை யொத்தபலருக்கு முயர்
தாரகப் பொருள் விரித்துப்
பன்னிமதுரத் தேன் மிகுத்தொழுகு கின்ற நின்
பவளவாய் முத்தமருளே
பலவளந் திகழ் திரு நெல்வேலி வருகந்தனே
பவளவாய் முத்தமருளே. (6)

சித்தியை விழைந்தத்தி யைக்காத்த முகிலெனச்
சிவகாருணிய முற்றுத்
திருவருளை நம்பியு னெழுத்தாறு மோதிச்
செழுந்தமிழ்க் கடலை நீந்தி
முத்திநெறி காட்டுசதுர் வேதாக மங்கூறு
முறைமை தவறாது சென்று
முதிர்மாத வம்புரிந் துயுமுருக தாசமா
முனிவனுலுண்மை மனுவை
யத்தினத் தோதுவித் தென்னையொரு தொண்ட
யாண்டருளலுண்மையாகி
லானேறு தந்தையும் பச்சை நிறமாதாவு
மருகிற்குலாவுகின்ற
பத்தினியரிருபேரு முத்தமிடுகின்றநின்
பவளவாய் முத்தமருளே
பலவளந்திகழ் திரு நெல்வேலி வளர் கந்தனே
பவளவாய் முத்தமருளே. (7)

இச்சைமலி வுற்றுனைப் போற்ற வல்லாருறுக
ணெல்லாந் தவிர்க்கு முதல்வா

வென்னையொரு பொருளாமதித்துவெண்பாடலொன்
றின்கனவி லீந்த குகனே
மெய்ச்சைவ நெறியாளர் வேண்டுருவமு மூவனும்
விளங்கிடக் காட்டு முருகா
விண்ணாடு முழுமையுங் குடியேறவைத்தவடி
வேலாயுதக் கடவுளே
கச்சைக் கிழிக்குமுலை மங்கையர் மயக்கக்
கடற்குட்படிந்து வீணாட்
கழியாது மெய்ஞ்ஞான யோகத் தவஞ்செய்து
களிகூரு முத்தராசே
பச்சைமயில் வாகனத்துற்ற குமரேசனே
பவளாய் முத்தமருளே
பலவளந்திகழ் திருநெல் வேலி வளர்கந்தனே
பவளவாய் முத்தமருளே. (8)

தனதன தனதன தன்னன தானன தத்தன தத்தனனா

குரவலர் தமனகம் வன்னிபொனீபமி குத்தணி மற்புயனே
குளிரியன் மதிபுரை வெண்ணிறமேவிய குச்குடம்வைத்தவனே
சுரரெழுமுனிவரர் கின்னரர் நாரதர் சுத்தரு மெச்சிறைவா
துகளறு நலமலி புண்ணியதேசிக துற்றுமுதற் பொருளே
யரசமுருகவென முன்னுவன் மாதுகை யற்றதளித்தவனே
யறுவகை நெறியினு மண்ணியவாதக ரத்தியுகைப்பவனே
முராகரி விழிதரு பன்னியர்வாய்தொடு முத்தமளித்தருளே
முளைவனமுறைகுக சண்முகவாய்கொடு முத்தமளித்தருளே (9)

தனன தத்தந் தனன தத்தந் தனன தத்தந் தனதனா

குயினிறப்பைங் கவுரிமுத்துங் குமரன் முத்தந்தருகவே
குறுமுனிக்கன் றினிதுரைக்குங் குரவன் முத்தந்தருகவே
சயிலமுற்றுந் தினநடிக்குஞ் சரணன் முத்தந்தருகவே
தருவரைக்கொன் றயில் பிடிக்குஞ் சதுரன் முத்தந்தருகவே
பொயிலர் பக்கங் குடியிருக்கும் புனிதன் முத்தந்தருகவே

புகழ்தழைக்கும் புலவருந்தும் புலவன் முத்தந்தருகவே
கயிலையிற்சங் கார்த்திகைக்குங் 'கணிசன் முத்தந் தருகவே
கவின்மிகுக்குங் கழைவனத்தெங்கடவுண் முத்தந்தருகவே(10)

முற்றிற்று.

## வாரானைப் பருவம்.

குகனே வருகச் சிவஞானக் கொழுந்தே வருகப் பவளநிறக்
குன்றே வருகக் குறுமுனிவன் குருவே வருகத் திரைக்கடனேர்
சுகனே வருகத் தமிழ்க்கிளியுஞ் சுகமாமுனிபோற் றிகழ்பவருந்
துதித்தஞ்சலிக்குஞ்சுயஞ்சோதிச் சுடரே வருகக் கவுமார
ரகனே வருகப் பன்னிருகை யரசே வருகச் செங்கதிர்வே
லப்பா வருகத் தமியனையாண் டவனே வருகப் பரமசிவன்
மகனே வருகச் சண்முகமா மணியே வருக வருகவே
வளஞ்சேர் நெலலைப்பதி புரக்கும் வாழ்வே வருக வருகவே (1)

புள்ளிக்கலாப மயிலூர்ந்து பொருப்புத்தொறும்போய் விளையாடும்
புனிதா வருகப் பழமை மறைப் பொருளே வருகப் புவனமெங்கு
மெள்ளிற்றயிலம் போல்விளங்கு மிறைவா வருகப் பவமாற்றி
யென்னையெடுத்தாண்டருள முகநீந்து மகிழ்வுற் றிடவருகத்
தெள்ளித் தினைமாவினிற் புதிய செந்தேன் மிகவிட்டுப் பிசைந்து
திரட்டித் தாவாங்கிப் பணிந்து தின்று மனத்திற்களி கூர்ந்து
வள்ளிக்கொடியை மணம்புரிந்த வரனே வருக வருகவே
வளஞ்சேர் நெல்லைப் பதிபுரக்கும் வாழ்வே வருக வருகவே. (2)

எந்தாய் வருகக் கடப்பமலை ரெழிற்குர் புரளுந் தடந்தோள் வெற்
பெல்லாமிருபொற்கொடி முலைக்கோட்டிப மிக்குழக்கக் களிகூருங்
கந்தா வருக வொருமருப்புக் கரத்தார் பிறகுவரு முருகக்
கடவுள் வருகப் பெருங்கருணைக் கடலே வருகக் கனகமயச்
செந்தாபரத்தூள றத்துடைத்துந் தெரிநீராட்டித் திலகமிட்டுத்
திருவா பரணஞ்சூட்டி யெனுட் சிறப்ப விளையாடிட வருக
மந்தாகினிப் பெண்ணணி னீதளித்த மைந்தா வருக வருகவே
வளஞ்சேர் நெல்லைப் பதிபுரக்கும் வாழ்வே வருக வருகவே. (3)

ஆறுதிசையுமுகமாகி யவிர்பன்னிரண்டு சமயமுந்தோ
ளாகிமறையா கமப்பொருளே யம்பொற் பதமாய் விளங்குநிலை
தேறுமொரேயத்து விதநெறிச் சென்று பொருளுணன் கையும் விழைந்து
செய்யும்பெருமை மாதவத்தோர் கியானத்தினிலும் வருங்குமரா
சீறுமரவிற் கொடியாரைச்சேர்ந்து மிடிநோ யான் மெலிந்தேன்
சிறிதுமிரங்கக் கூடாதோ செல்வப்பொருளின் றருள்வாயோ
மாறுபடாத சடாக்கரமா மணியே வருக வருகவே
வளஞ்சேர் நெல்லைப் பதிபுரக்கும் வாழ்வே வருக வருகவே. (4)

களினங்குவளை மலர்பூக்க நறுநீர்த் தடாகத்தினிற் றளவ
நகை நங்கையர்களுண்டாட்டு நயச் செந்தேனுமிசைச்சுரும்பு
மிளிருமணி பெற்றுளைகின்ற வெண் சங்கினமுமா கயற் குலங்கள்
விண்ணிற் குதிக்கும் விளையாட்டு மெதிரொழுந்த பெரும்பானுவர்
வெளிறு வாய்ந்த கிழவல்லி வீசைக்கும் பறவைப் பேரொலிய
மிகுத்து துறக்க நகர்போலும் விளங்கிப் பொழிலில் விரைத்தென்றல்
வளிவீசிய நெல்வேலியனே வருக வருக வருகவே
வண்டாரகச் சின்மயவேளே வருக வருக வருகவே. (5)

பாசியசமா மிசம்புக்கும் பாமரைக்கண் ணன்மதனன்
பார்த்தன் முகுந்தன் கும்பமுனனைப் பாட்டுப்பாடிப் பொருட்டேடிக
காசினியின்மிக் குழலாயர் கடைக் கண்ணளித்துக் காப்பாற்றுங்
கடமை புனக்குக் கிடையாதோ கருணைக் கடலிற் றுறைவாம்மா
வாசினியிற் சென்றுனைந்த மடைவாய்மனக் கூறுதல் பொய்யோ
வடியேனுயும் வண்ணமுமறியே னந்தாமயங்கி வருந்துகின்றேன்
மாசில்வேலுனை முருகா வருக வருக வருகவே
வண்டாரகச்சின் மயவேளே வருக வருக வருகவே. (6)

தலையிற் கடிமாமலர் முடிப்பன் றயக்கு நுதலிற் றிலகமிடேன
றவசிலருக்குங் கருணை பொழி திருக்கண்கட்கஞ் சனமெழுதேன்
மலையமுனிக்கும் பொருளுரைத்த வாயின் முலைப்பாலூட்டுகிலேன்
வண்ணச் செவிக்குக் குழைபோடேன் மார்பின் மணிமாலிகை புனையேன்
விலையற் றொளிர் பட்டுடுத்தரையின் மிளிரு மரைஞாண் பூட்டுகிலேன்
விரைப்பூங் கழலிற் சிலம்பணியேன் வீதி விளையாட் டையுங்காட்டேன்
மலைவில் புகழ் நெல்லையின்முருகா வருக வருக வருகவே
மறைநூல் வழுத்தும் பரம்பொருளே வருக வருக வருகவே. (7)

தோடமொழிந்த துறவோரைத் தொலைத்த திருமான் மோகினியைச்

சாரங்கையரைத் திருமகளைத் துணையாக் கூறுமிளமடவார்
தோடவிழுமென் மலர்க்குழலிற் றெரங்கன் முதலாம் பணிதரித்துச்
சுவணச்சரிகைத் துகிலுடுத்துத் தூயவிழிக்கஞ் சனமெழுதிப்
பாடலிசைப் பண்ணினிற் பாடிப் பரதநடனம் பயின்மறுகிற்
பனிப்பிற் றிகழ்ந்தும் பாமுட்டிப் பருங்கற் பகப் பூந்தேன் சாய்க்கு
மாடமலி நெல்லையிற் குமரா வருக வருக வருகவே
மறைநூல் வழுத்தும் பரம்பொருளே வருக வருக வருகவே. (8)

தனன தந்தன தனன தந்தன தனன தந்தன தனதன

நிரைசெப்பவ வினைகளைந்தருள் செயுமினந்தையன் வருகவே
சிறந்த சுந்தர முறநடம்புரி சிகியமர்ந்தவன் வருகவே
ககனமொன்றிய சுரர்புகழ்ந்தவிர் கருணையங்கடல் வருகவே
கனக கிண்கிணி பரிபுரந்திகழ் கழலமைந்தவன் வருகவே
சுகர் பொரும்பல முனிவரன் பொடுதுதிசெயுங்குகன் வருகவே
துகளறுஞ்சது மறைவிளம்பிய சுயபரம் பொருள்வருகவே
மகர குண்டலம் வணையு மொண்செவி மருவுசுந்தரன் வருகவே
வளமை தங்கிய கழைவனந்தனில் வதியு மிங்கிதன்வருகவே.(9)

தனன தந்தன தனன தந்தன தனன தனன தனதன

வரமிகத்தரு பரம சற்குரு வருக வருக வருகவே
மறியுறத்துளுவ மணிதருக் கெமன் வருக வருக வருகவே
மரணமுற்பவ வினையொழிப்பவன் வருக வருக வருகவே
வனசரத்துயின் மருவுபொற்புயன் வருக வருக வருகவே
வாருளத்தினி லினிதிருப்பவன் வருக வருக வருகவே.
வடிவினிற்றுக ளழகு பெற்றவன் வருக வருக வருகவே
மரகதப்பரை தருமெழிற் குகன் வருக வருக வருகவே
வரைவனத்துறை யறுமுகத்தவன் வருக வருக வருகவே. (10)

முற்றிற்று.

# அம்புலிப்பருவம்.

### சாமம்.

மழவிடை யினிற்குலவு மணவாதரக்கத்தில்
வந்தோனெனப் புகழ்தலும்
வருடத்திலொருநாளி லெல்லோருமுயர்விரத
வழிநின்று வந்தித்தலும்
பழகு மெய்ப் புலவருரு கிப்புகழு மாட்சியும்
பைங்கதிர மப்பிரசைபையும்
பஞ்சபாணக்கிழவ னுக்குயர் வெனப் பெரும்
பாவலருரைக்கு மிசையுங்
குழவனப் புங்கலைக ளொன்றியிரு ளிக்கலுங்
குன்றுபெரு வெள்ளத்தினுங்
குதுகுலித்துச் சென்று விளையாடலுஞ் செழுமை
கூடமுத லேற்று மாண்பு
மழகு மங்கையர்புணர் மகிழ்ச்சியு மிவற்குமுண்
டம்புலி யாடவாவே
யல்லற்ற விர்த்தருளு நெல்லைப்பதிக் குறை
டம்புலியாடவாவே. (1)

சீதளானன முனக் கொன்றுண்டி வற்காறு
திருமுகக் கமலமுண்டு
திவலை யமுதுண்டுனக் கிவனுக்கு மூவாறு
சீர்க்கருணை யமுதமுண்டு
பூதலத்திரவிருட் போக்குவதுனக்குண்டு
புனிதவடி யாருளத்தின்
புரையிருள கற்றியக் கோயிலிற் சந்ததம்
பொலிவுற்றிருந்து களிகூர்
போதபர மானந்த மீந்திடலி வற்குண்டு
புல்லொளியுடுக் கணங்கள்
புட்கரத்தினிலுனக் குண்டிவற் கெங்கணும்
பூதகணமாதி மிக்குண்

டாதலாலுனை விழைந் தழைக்கத்த காதிவனொ
டம்புலியாடவாவே
யல்லற்ற விர்த்தருளு நெல்லைப்பதிக்குகனொ
டம்புலியாடவாவே (2)

வித்தமலி சிலைபுனைவ னுக்கமுதளித்துநீ
மெலிவையிலனெவ்வுயிர்க்கு
மேதினியில் வந்துற் பவிக்காத பரமுத்தி
மேவமுத மீந்து நிறைவான்
பைத்தலைப் பணியினைக் கண்டச்சமுற்றுப்
பதுங்கி நலிவாய் நீ யிவன்
பச்சைமயிலதி சீக் கிரத்திற் கிழித்துப்
பரிந்துண்டு நடனமாடு
மித்திரையை நீயலம் வரற்கொரு தினஞ்செல்லு
மிவனொடிப் பொழுதில் வருவா
னிரவிமதிக் கொளிபெற் றிலங்குவாய் நீயிவ
னெப்போது மெங்கு மிளிர்வா
னத்த மொரு பன்னிரண் டங்கொண்ட னைப்பதா
லம்புலியாடவாவே
யல்லற்ற வித்தருளு நெல்லைப்பதிக்குகனொ
டம்புலியாடவாவே. (3)

## பேதம்.

ஆடாவினுக்குப் பயந்துடைவை நீ யிவனொ
ராண்டலைக் கொடி மஞ்ஞைகண்
டாலெடுத்து தறிக் கிழித்துப் புசித்துவிடு
மாதித்தன் முற்கிளர்ந்தா
னீடலங்கார வொளி முற்றுங் குறைந்திடுவை
நீயிவன் முகுந்தன் முதலோர்
நேசித்திறைஞ்சு மொரு சோதிப் பிழம்பிரவி
னிலவொளி பரப்பு மிறைநீ

யேடலுற் றெங்கணும் விளங்கும் பரப்பிரம
மிவனீ பொருப் பரிந்தோ
னேவற் றொழிற் செய்குவாய் கனக நாடவற்
கீந்தாள வைத் தோனிவ
ளுடகச் செங்கையா லெண்புற் றமைத்துளா
னம்புலீயாடவாவே
யல்லற்ற விர்க்கருளு நெல்லைப்பதிக்குகனொ
டம்புலீயாடவாவே. (4)

சோடசக்கலையனீ யறுபத்து நான்கென்ற
சொன்னகலை ஞான முற்றாந்
தூயகவு மாராருக் குக் கொடுப்போனிவன்
றொகையர் முகத்தழகினுக்
கீடுறைதரப் பெறுவை நீயிவனெவர்க்கு மொப்
பில்லாமுழுச் சோதியா
னெழிலுடற் றேய்ந்துவளர் வுற்றிலங்கிடுவை நீ
யிவனென்று மொருதன்மையான்
றோடிபசகதுக்க மீயுமொண் பதுகிரக
சேகரத்தினி லொருவனீ
சிவபிரானரி பிரமர் முதலினர் தினந்தொறுந்
தெண்டனிடு செல்வனிவ
ளுடம் பாக்கடவு ளாதலா லிறுவிரை வி
லம்புலீயாடவாவே
யல்லற்ற விர்க்கருளு நெல்லைப்பதிக்குகனொ
டம்புலீயாடவாவே (5)

வனசாதனத்திலுற் றாக்குலாவுங்கடவுள்
வெண்கரங் கொடுபடைத்த
வத்துநீ யன்னவ னமுத்தலை யினிற்குட்டி
வன்சிறைச் சாலையிட்டு
மனமிக வருந்த நிகளந் தரித்தோனிவன்
மங்குல்வடிவத்தானவர்

மரபினைச் செப்பிடிற் சித்தங்கலங்கியல
மந்து வெருவிச் செல்வை நீ
அனையிருத்த வரைவடி வேலாயுதங்கொண்டு
திண்புய மறுப்போனிவன்
சேவடிக் கமலமல ராலுனைய ரைத்துள்ள
சிவபிரானெற்றிவிழியோன்
றனற் குழவியாதலாற் பெருவெகுளி கொள்ளுமுனை
மம்புலீ யாடவாவே
பல்லற்ற விர்த்தருநெல்லைப்பதக்குகனொ
டம்புலீ யாடவாவே. (6)

## தானம்.

சிகிபாலூரகப்பகையொழிந்துதிருக்கண்ணநுளாற்களங்கமற்றுத்
திருநீற்றிலையாற் சயரோகந் தீர்ந்து கிரணமழுங்காமன்
முகினேர் குழற்றுரைமையனையார்முலைசேராதைமுளைக்காமன்
முதுமைப் பொதிபாசமுனிவன் முதலாங்குமாரரைக்கூடி
யெகினத்திவர்வான்விதிதாண்டி யிறப்பும் பிறப்புமில்லாம
லிப்பாருலக முள்ளமட்டு மின்பவாழ்வு மிகப்பெறலா
மகிதர்க்கெடுக்கும் வேலவனோடாட வருவாயம்புலியே
யணிவேய் வனத்தெந்த மாணுடனோட வருவாயம்புலியே (7)

பத்திவயிராக்கிய முதிர்ந்து பரமஞான மிகத்தழைந்து
பருமைக் கமடத்தினைப் போலும் பரிந்தைம் புலனையுள்ளடக்கி
முத்திதரு மைம்பெழுத்தோதி மூன்றுமலவே ரறக்களைந்து
முதலிற் சகுணதியானமுற்றி முறைநூலுணர்ந்த மதிகொண்டு
புத்தியினுக்கு மடங்காமற் பொலிந்து விளங்குநிர்க்குணத்தைப்
பொருந்துந் திருத்தொண்டரைச் சேர்ந்துபுகழானந்தவாழ்வுற
மத்தியாளன் மருமகனோ டாடவருவாயம்புலியே [லா
யணிவேய் வனத்தெங் குமரனுட னோடவருவாயம்புலியே. (8)

## தண்டம்.

திருமாலுவணப் புள்ளையிவன்செம்பொற் கலாபப்பசுஞ்சிகியின்

துரியாதீதப் பரம்பொருளே சோதிவடிவேற் கரத்தானே
யகரம்போலு மறிவாகி யகிலமெலாக முழுவதினு
மவிர்ந்தாதரிக்கு முருகோனே யருளேவடிவாகிய குகனே
திகழுமழகாமா மணியே சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருநெல்வேலிக் குருபரனே சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. (2)

கொல்வாதனை நோய் முழுதகற்று மெய்காலபவிதா ரகவீட்டிற்
குமாரமகள் குஞ்சரியுடனே கொஞ்சிக்குலாவன் முதலெவைக்கும்
பல்வாருயவாங்கியற்றிப் பருமாங்கனியா லடைப் புனுற்றிப்
பரிசுத்தந் தோய்வலம் புரியிற் பழுதி னறுந்தேன் மிகவார்த்து
நல்வாசனை மாதளையரிசி நன்கிட்டட்டுண்டளி கூர்ந்து
நவிலும் புவனகோடிகளை நயந்து படைத்துக் காந்தளிக்குஞ்
செல்வாவுனக்கு நிகருண்டோ சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருநெல்வேலிக் குருபரனே சிறியேஞ் சிற்றிற் சிதையேலே (3)

திங்கணிகர் வெண்மணற் கொழுந்துத் திற்றிசமைக்கு மடுக்களமீன்
திகழுமிரவிற் றூங்குதற்குத் திருப்பள்ளியறை யினைப்பூசை
யங்கமுறையே செய்யுமிட மறைவீ டெழிற் பட்டகசாலை
யவிருமொட்டுத் திண்ணைமுதலமைத்த வருமையறி கில்லாய்
தூங்கமலி நெஞ்சகத்தினுக்குத் துன்பம்புரியே லெம்மொடுநீ
துணையாவந்து விளையாடிற் றேற்றத் தலைமைக் கிழிவாமோ
செங்கமலந் தாளிணை வருந்தச் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருநெல்வேலிக் குருபரனே சிறியேஞ்சிற்றிற்சிதையேலே. (4)

அம்பொற்சபையிற் புலிபாம்பு மமர் முனிவர் முதலோரு
மளிகூர்ந்திறைஞ்ச நடம்புரிவா னடற்றேறுள் சடையா லாகமத்திற்
றெம்பொற்றிய சிற்றறிவுடையார் தேறற் கரிய சதுர்வேதச்
சிரசிலிமையா சலக்கோமான் சேர்சீர் மேனா மகண்மடியிற்
பம்பொய் யனைதீர்கவுமாரர் பாடல் வரைந்த திருவேட்டிற்
பலகுன்றுகளிற் குறுமுனிவன் பதும மனத்திற் றெளித்திலங்குஞ்
செம்பொற் பதத்திற் புழுதியுறச் சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருநெல்வேலிக் குருபரனே சிறியேஞ்சிற்றிற் சிதையேலே. (5)

வித்தா பலங்கி யிடமெல்லாம் வேமோ டழுக்குஞ் சடாக்கரமும்

வாரிசக்கைகளாற் றமருகங்கைத்தாளம்
வாஞ்சித்து வந்துகொட்டத்
தருநிழற்குடியிருந் தண்டம்புரப்பவன்
றாழ்ந்தஞ்சலிக்கவிமையோர்
தண்பாரிசாதமலர் கொட்டப் பதஞ்சலி
தாக்குமுனி வாழ்த்திசைக்கக்
குருமுதற்கிரகங்க ணன்னிலையினின் றுவகை
கொண்டேவல்செய்து நிற்கக்
கோலவீணைப்பண் முகத்துருகி நாரதன்
குதுகுலித்திசை பாடிடத்
திருமுயலகன்முதுகினடமிடு சிவன் குமர
சிறுபறைமுழக்கியருளே
தேனலர்ப் பொழினெல்லை மாநகர்ச்செல்வனே
சிறுபறை முழக்கியருளே. (2)

வெங்காளநஞ்சனைய புன்சமய மத்தனையும்
வேரோடறுத்தகற்றி
மெய்யருட் சிவசமய மலைமேல் விளக்கென
விளங்கவே நிலைநிறுத்திப்
பொங்காணவப் பெருங் காரவுணர் குலமெலாப்
போர்வேலி னலழித்துப்
புங்கவர் படுந்துயர முற்றுந்தவிர்த்து நிரு
புளகிதங் கொள்ளவைத்துச்
சங்காழிவில்வைத்த கைத்தலமுகுந்தன் விழி
தருமாதனைப் புணர்ந்து
சகளநிட்களநாடி வந்திக்கு மெய்யடியர்
தந்திருக்கூட்டமேவிச்
சிங்காரமயின்மீ திருந்த குமரேசனே
சிறுபறைமுழக்கியருளே
தேனலர்ப் பொழினெல்லை மாநகர்க்கதிபனே
சிறுபறைமுழக்கியருளே (3)

பங்கயத்திருமகளை யுரமார்பில் வைத்துலக
பரிபாலனம் புரிந்து
பாண்டவர்களுக்குதவி பலவாறு செய்தொரு
பழத்தினிற் கன்றைவீசித்
தங்கமலைவிற்பரமர் தழுவுமாதகவல்லி
தமயனாகித் திகழ்ந்து
தசரதகுமாரனாகிப்பிறந்த வுணர்கோன்
றனைவென்று தலைபாயிரந்
தங்காவலமாம்புளிய மாமூடு சென்றுவார்
சடகோபனும் பகர்ந்த
தமிழ்மாலையுந் துளசியும் புனைந்திரணியற்
சங்கரிக்கும்பொருட்டுச்
சிங்கமாகித்திரத்தூணில் வருமான் மருக
சிறுபறை முழக்கியருளே
தேனலர்ப்பொழினெல்லை மாநகர்க் குருபர
சிறுபறைமுழக்கியருளே (4)

எத்திகிரியும் பரவு மெய்ப்புகழ் மிகப்பொருந்
திமயாசலத்திலங்கி
யெகினமொடுபன்றியுந் தேடரியசெம்மலை
யெழின்மணமுடித்துமுன்னை
னத்தியினிடத்திலொரு பொற்கொடிவரும்படி
யழைத்த சீகாழிமுனிவற்
கரியமெய்ஞ்ஞானப் புதுப்பாலளித்தவ
னறைந்த கவிமாலைசூடிப்
பத்திநெறியிற் சென்ற கவிராச பண்டிதர்
பயந்தமகளாகியவர்பின்
பவவினையறுக்கின்ற காசிவரைபோய்வந்து
பாருலகளிக்கு மிளமைச்
சித்திரப் பச்சைமயில் பெற்றமயில்வாகனே
சிறுபறை முழக்கியருளே

வாகுருவிற் சிறைவிரித்து வயலா ரணம்பொற் கொடிவெற்றி
முழக்க மோங்கில் வனக் குகனே முழக்கியருளாய் சிறுபறையே
மூவாக் குமர குருபரனே முழக்கியருளாய் சிறுபறையே. (8)

தனத்த தனனா தனதனனா தனத்த தனனா தனதனனா.

வலைக்கை மடவார் மயல் வினையால் வருந்து மருவா தருளினையே
மனைந்திலுயர்வா மெனவெண்ணா வளர்த்துவந்தாய் திருவடியா
ரிளைத்து மருகா இனிதுறவா விழுக்க கமலவாணியை நீர்சீ
ரலைசப் புலவர்வாழ் வடைய வென்பெய வினிக்க கவிபாடிட வலைமோ
துலைப்புணரி சூழுலக மெல்லா மொழுக்க கலிவாரனை யணுகா
துவப்புமிகதான் மறை முதுநூலுரைத்த முறைநிறுத்தல் பெறவேய்
முலைத்தவளம் வாழுமுகனே முழக்கியருளாய் சிறுபறையே
முகற்பெயான் மயமாகவமணியே முழக்கியருளாய் சிறுபறையே (9)

தன தன தன தன தனதனதான தனத்த தனதனனா
முரகரிதிருமகன் மகிழ்மருகோனே முழக்கு சிறுபறையே
முதுமறை பரவுமுன் முனிமுருகேசா முழக்கு சிறுபறையே
முதறுமுமகரமைந்தை செயும் வேலா முழக்குசிறுபறையே
முடிவறுகுறுமுனி பாவியதேவா முழக்குசிறுபறையே
முரடரும் வழிபட நிலவுதயாளா முழக்கு சிறுபறையே
முழுமதி பொலிமிளிரறு முகவேளே முழக்குசிறுபறையே
முரலிருபரிபுர மணிதரு பாதா முழக்கு சிறுபறையே
முனைவனை மருவிய சிவகுருநாதா முழக்கு சிறுபறையே (10)

முற்றிற்று.

## சிறுதேர்ப் பருவம்.

கருங்குழற் குடியிருந் தரசபுரி காவலன்
சரியாசனத்தமர்ந்து
தன்னிகரி லாமற் பிறங்குமொரு மாதவி
தனித்தேருருட்டவளகை
மருவுகின்னரர்பிரான் புட்பகத்தேரேறி
வாஞ்சித்துவந்துருட்ட

மங்குலைப்பொருவிறத்தானவருடற்கிரியை
வலிமைப்பைசாசருட்ட
விருளனைத்துந்தவிர்க் கின்றகதிராயிர
மிலங்கு சூரியனொராழி
யிட்டபொற் றேருருட்டச் சத்தி யத்தே
ரினிதுருட்டக் கரத்தாற்
றிருநெல்வேலியிலுற்ற குமரனெம்பிரானை
சிறுதேருருட்டியருளே
சிறைவிரித்துக்கூவு சேவலங்கொடியனை
சிறுதேருருட்டியருளே. (1)

மருமலர்ப் பொழிலூடு ககனம் வளைபோர்வளர்
வருக்கைப் பலாக்கனிகளை
வன்கரங்கொடுகீறி வண்டனைய கொட்டைகளை
மாபோடெடுத்தெறிந்து
பெருமதுரமுற்றசுளை களைவயிறு முட்டமிகு
பேராவலிற்புசித்துப்
பிணிநோயகன்று தனை முற்றறப் பூக்கடரு
பிரசத்தை மிக்கருந்தி
யிருதினை யடற்கீசகங்களும் பொருமதனை
னெறிகணைகளுக்குவாடி
யேக்கமற்றுக் கொஞ்சி யளவின்றிவிளையாடி
யின்புற்றணைந்து மகிழும்
திருநெல்வேலியிலுற்ற குமரனெம்பிரானை
சிறுதேருருட்டியருளே
திகழகத்தியமுனிக் கினிதுதவு தேசிகா
சிறுதேருருட்டியருளே (2)

இருமருப் பேந்திய பெருங்கவரி கண்மடுவி
னிடைமுழுகலிற்கெண்டைமீ
னினங்கன்றுங்கரக் குழைபூந்து மடியினின் முட்டி
யினியபாலமுதமுண்டு

பருமை மலைவாழையிற் றாழையிற் றென்னையிற்
    பனசத்தின் மாமரத்திற்
பனைப் பாதவத்திற் பழக்குலைகள் சாய்ந்திடப்
    பாய்ந்து புயலைக்கிழித்தார்த்
தொருசக்கரத்திரதன் மண்டலத்திற் புகுந்
    துடுபதி யிருந்தபாங்க
ருற்றுத்தனுமம் புனைந்த தாரகைகளை
    யுழக்கித்திரும்பும் வளமார்
திருநெல்வேலியி லுற்ற குமர கெம்பீரனே
    சிறுதேருருட்டியருளே
திசைமுகற் குத்தாரகப் பொருளுரைத்தவா
    சிறுதேருருட்டியருளே. (3)

மந்தரங் கேசரிகளச்சாக வொண்பரிதி
    மதிநேமி யினையாக நான்
மாதமந்திர ஞான மற்றுள வெலாம் பெரு
    வசுந்தரம் பிறவுமாக
வந்தரநுடன் பூதர் படையாக நான்குமறை
    யசுவமாகக்கரியமா
லம்பாக மேருமலை வில்லாக வாசுகிந
    லவிரு நாணாக மலர்வா
பூந்தமணியன் சூதனாகமலை யினமாழி
    யாதிய வையங்கமாக
வரனரசனாக மிளிர் முப்புர மெரித்து பொடி
    யாகவரு பொற்றேரினிற்
செந்தகை மிகுத்தகர மலர்கொண்டு நெல்லையிற்
    சிறுதேருருட்டியருளே
தென்பரங் குன்றிலொரு பூதத்தை வென்றவா
    சிறுதேருருட்டியருளே. (4)

மைந்நிறப் பைங்கூந்த லம்பிகை யிடப்பாக
மருவரன் புகழ்சூலமும்
வானம்புரந்தாசனி வார்முலைக் கலவைகமழ்
மால்வியக் குங்குலிசமு
மெய்ந்நிலைப் பண்ணவ ரிடுக் கங்களைந்தமர்
விளக்கு மவுணைப் புணரியை
வெகுளியூ ழிப்பெருங் கனலால யின்றிலகு
வேற்படையும் வில்லுமம்புஞ்
செய்ந்நிகச் சக்கரமும் வாளுந்துறட்டியுஞ்
சீர்ப்பலகையும் பாசமுஞ்
சோனைவத் தடியர்கட் கபயகரமுஞ்செய்து
திருநீறுமிக வழங்குஞ்
செந்நிறப் பன்னிரு கரங்கொண்டு நெல்லையிற்
சிறுதேருருட்டியருளே
தெளிதமிழ்க் கிளிமுனியை யாண்ட சிவதேசிகா
சிறுதேருருட்டியருளே. (5)

வேறு.

புகழுமடியார் திருவாயிற் பொறிக ளாறும் பொலிந்துருளப்
புதுமுத் தமிழ்ப்பா வலர்வறுமை போகி வாழ்வுற்று வப்புருள
இகல்வாளவுணர்தலை யுருள விமையோரிடர் தீர்ந்தின்புருள
வெறும்புக் கொலையுஞ் சகியாதா ரிடத்திற் கருணை வழிந்துருள
நிசமாக மநூலுணராத நீசர் வினைநீர்வடிந்துருள
நீறோடக்க மணியணிவார் நினைவிற் பெருமைக் குறியுருளத்
திகழ்வேய் வனத்தில் வளர்முருகா சிறுதேருருட்டியருள்வாயே
சேவற்கொடி யொன்றுடையானே சிறுதேருருட்டியருள்வாயே. (6)

உரவா னகத்திலுடுக் கணத்தோ டொளிருங்குளிர்வெண் மதியுருள
வுயிர்வாதனை செய்துடல் வளர வூனுண் டுவப்பார் மெலிந்துருள
விரதப் பெரியோ ரானந்த வெள்ளக் கண்ணீர் மிகுந்துருள
வேலுமயிலு மெனப் புகல்வார் மிடிநோயனைத்து மகன்றுருள
வரகப்பெருமான் பலதலையு மொருங்கு பொடிபட்டகியுருள
வோங்காரத்துட் பொருட்டெரியா துற்றோன் றலையிற் புடைத்தகையாற்
றிருஞ்சூழங்கில் வணப்பதியிற் சிறுதேருருட்டியருள்வாயே
சேவற்கொடி யொன்றுடையானே சிறுதேருருட்டியருள்வாயே. (7)

முத்தமணியா டகமுடியு முகமூவிரண்டும் விழியருளு
முங்காற்புயமுங் கடமார்பு முனைவேல் புனைபன்னிருகரமுஞ்
சத்தமலிபொன் னரை ஞாணுந் துவர்ப் பட்டுடையுங் கடிகமழூர்
துணர்ப்பூங்கமலத் துணைக்காலிற் றொனிக் குஞ்சதங்கைப் பரிபுரமும்
வித்தர் பொழியா மாலைகளும் வெரிக் கடப்ப மலர்த் தொடையும்
விளங்கத் தமியேன் மனவெளியின் மிளிர்ந்து நடிக்குங் குமரேசா
சித்தர்பலர் சூழ்வேய் வனத்திற் சிறுதே ருருட்டியருள்வாயே
சேவற்கொடி யொன் றுடையானே சிறுதே ருருட்டியருள்வாயே. (8)

தனதன தய்யத் தனதானா தனனா தனத்த தனதானா.

கருவளர் பையுற்றுளதாயார் கவிஞர் வயிற்றி லுதியாதே
கனிவுறு செய்யுட் டொகை கூறவார்களை யாசுரைத்து மெலியாதே
யுருவளர் தெய்வப் பொறியாலோ துயர்மாக வந்தா ருறவூடே
யுரமொடு வைகிச சுகமாவாழ்வுடன் வாழ் சிறப்பு நலியாதே
மருவளர் வில்வத்தொடை சீர்வான் மதிதாதகிப் பொன்மலர் மூவா
மதலைநல் வெள்ளைச்சிறை கூடா வலர் தீவிழிக்கண் வருபாலா
திருவளர் நெல்லைக்குமரேசா சிறுதேருருட்டியருள்வாயே
சிலைநுதல் வள்ளிக் கொடிபாகா சிறுதேருருட்டியருள்வாயே. (9)

தனதன தத்தன தனதனதானா தனதானனத் தனனா

செருவிலரக்கரை வதைசெயும் வீரா சிறுதேருருட்டுகவே
சிலபெரியர்க் கினிதருளு முதாரா சிறுதேருருட்டுகவே
திருவருளைக்கிளி மருவிய தோளா சிறுதேருருட்டுகவே
சிகிமுது கிற்றின நடமிடுதாளா சிறுதேருருட்டுகவே
திருகு மனத்தவர் தெரிவருசீலா சிறுதேருருட்டுகவே
செழுமை மடப்பிடி தழுவு முலோலா சிறுதேருருட்டுகவே
தெருளுறு சித்தர்கள் பரவு விநோதா சிறுதேருருட்டுகவே
திகிரி வனத்துறையறுமுக நாதா சிறுதேருருட்டுகவே (10)

முற்றிற்று.

ஆகப்பருவம் பத்துக்குக்கவி 100.

